உ

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ சங்கர பகவத்பாத விஜயம்

ஞான பாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக

பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள்

எழுதியது.

நூலாசிரியரின் ஷஷ்ட்யப்த பூர்த்தி

விழா வெளியீடு



பிரசுரம்:

ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா

மேலமாம்பலம், சென்னை-33

1974] [விலை 60 காசுகள்

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ சங்கர பகவத்பாத விஜயம்

ஞான பாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக

பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள்

எழுதியது

நூலாசிரியரின் ஷஷ்ட்யப்த பூர்த்தி

விழா வெளியீடு




பிரசுரம்:

ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா

மேலமாம்பலம், சென்னை-33

1974] [விலை 60 காசுகள்

# பதிப்பாசிரியரின் பணிவுரை

ஞான பாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள் எழுதிய ஸ்ரீ சங்கர பகவத் பாத விஜயம் இப்பொழுது மூன்றாம் முறையாக வெளியிடப்படுகிறது. இந்த நூலை முதல் முதலாக பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் எழுத நேர்ந்ததற்குரிய காரணத்தைத் தமது நூன்முகத்தில் அவர்களே விளக்கியுள்ளார்கள். ஸ்ரீமத் பகவத் பாதர்களின் ஜயந்தி உத்சவத்தை மிக்க சிரத்தையுடன் கொண்டாடிவரும் நமது சாஸ்திரிகளின் ஷஷ்ட்யப்த பூர்த்தி விழா அந்த சங்கர ஜயந்தி சமயத்திலேயே வருவது சிறந்ததொரு தெய்விகமான பொருத்தம். எனவே அவர்களது ஷஷ்ட்யப்த பூர்த்தியை முன்னிட்டு அவர்களைப் பாராட்டும் நன்னாளில் அவர்கள் எழுதிய இந்த நூலையும் வெளியிட வேண்டுமென்னும் எண்ணமும் திருவருளால் தோன்றி அவ்விதமே வெளியிட்டுள்ளோம்.

பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு பல கோடி நூறாயிரமாண்டு நம்மிடையே வாழ்ந்து ஸத்வித்யாப் பிரசாரத்தில் ஈடுபட்டு நம்மையெல்லாம் என்ஞான்றும் நன்னெறியில் நடத்திச் செல்ல வேண்டுமென பிரார்த்திக்கிறேன். இந்த நூலை வெளியிட முன் வந்தபோது பெரு மகிழ்ச்சியுடன் அனுமதி அளித்த பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளுக்கும், மிகுந்த ஊக்கமளித்த ஸ்ரீமான் ராவ்ஸாஹிப் V. சின்னஸ்வாமி ஐயர் அவர்களுக்கும் இதை வெளியிட இசைந்த கனம் உயர் நீதிமன்ற நீதிபதி ஸ்ரீமான் K.S. வெங்கடராமன் I. C. S., அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
சிவ புராண ஞான பூஜகர்
(பதிப்பாசிரியர்)

மேலமாம்பலம்
சென்னை-33
14—4—1974

# நான்முகம்

கைலாஸவாஸியான பரமேச்வரன் அதர்மங்களைக் கண்டித்து உண்மையான அத்வைத தத்துவத்தை ஜனங்களுக்கு உபதேசிக்க சுமார் 2000 வருடங்களுக்கு முன்னர் காலடியில் ஸ்ரீசங்கர பகவத் பாதர்களாக அவதரித்தார். முப்பத்திரண்டு வயதிற்குள் இந்நிலவுலகிற்கு, சிறப்பாக நம் பாரத தேசத்திற்கு அவர்கள் செய்த பேருபகாரம் என்றும் மறக்க முடியாத ஒன்றாகும். ஆதி சங்கரர் ஏற்றி வைத்த அந்த ஞானதீபம் இன்று வரையில் விடாமல் தலை முறை தலை முறையாக காஞ்சீ காமகோடி பீடம் ஜகத்குரு பரம்பரையில் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

1955ஆம் ஆண்டில் கருணாநந்த மண்டலி என்ற ஒரு ஸ்தாபனத்தை ஸ்ரீ பெரியவாள் ஆசியுடன் ஆரம்பித்தோம். அந்த சமயம் நமது மடத்தின் உண்மைகளை மறுக்கும் ஒரு புத்தகத்தைக் காண நேரிட்டதால் மனம் வருந்திய அடியேன் நமது மடத்தின் உண்மை விஷயங்களைக் கொண்ட ஸ்ரீ சங்கர விஜயம் ஒன்றை வெளியிட ஆவல் கொண்டேன் ஸ்ரீமதாசாரியாளிடம் அனுமதியும் விஷயங்களும் பெற்று சிறு புத்தக உருவில் ஸ்ரீசங்கரபகவத்பாத விஜயம் என்னும் தலைப்பில் ஒரு நூல் வெளியிடப்பட்டது. அதில் எவரையும் குறை கூறவோ மறுக்கவோ செய்யாமல் ஸ்ரீ பகவத் பாதாளின் சரித்திரத்தை முறையாக எழுதி காஞ்சீ காம கோடி பீடஸ்தாபனம் செய்ததையும் காஞ்சீயில் சித்தி அடைந்ததையும் விவரமாகக் கூறியுள்ளேன்.

இந்த நூல் முதலில் வெளியிடப்பட்டபோது போலகம் ஸ்ரீராம சாஸ்திரிகள், வேப்பத்தூர் சுப்பிரமணிய சாஸ்திரி

கள், டாக்டர் வே. ராகவன், ஜட்ஜ் என். வெங்கடராமய்யர், கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள் முதலிய பல மஹா, வித்வான்களும், ஆசார்ய பக்தப் பிரமுகர்களும் மதிப்புரை எழுதிக் கொடுத்து உதவினர்கள். ஹிந்து, சுதேசமித்திரன், ஆனந்த விகடன், கல்கி மற்றும் பல பத்திரிகைகள் மதிப்புரை எழுதி ஆதரித்தன. புத்தக வெளியீட்டு விழாவும் தர்மரக்ஷாமணி கே. பாலசுப்பிரமணிய ஐயர், ஆனந்த விகடன் தேவன், தருமபுர ஆதீனம் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் ஆகியோர் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அந்த நூல் பிரதிகள் முழுவதும் செலவழிந்து ஒரு பிரதி கூட கிடைக்காதுபோன சமயம் அதை மறுபதிப்பாய் தனது 1964 ஆண்டு ஸ்ரீ சங்கர ஜயந்தி மலரில் ஸ்ரீ ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்கள் வெளியிட்டார்கள். அவைகளும் செலவழிந்து போன நிலையில் மறுபடியும் தனி நூலாக வெளியிட முன்வந்திருக்கிறார்.

ஸ்ரீமத் ஆசார்யாளின் சரித்திரத்தையும் பெருமைகளையும் பரப்புகின்ற இந்த முயற்சியைக் காட்டிலும் சிறந்த பணி வேறொன்றுமில்லை. இந்த நூல் மறுபடியும் வெளியிடப்படுவதில் எனக்கேற்பட்ட மகிழ்ச்சி அளவிடமுடியாதது. ஒவ்வொரு ஹிந்துவும் இதை ஆதரித்து ஆசாரியாளின் அருளை அடைய வேண்டுமாய்க் கோருகிறேன். நடமாடும் தெய்வமான ஸ்ரீகாஞ்சி காமகோடிபீடம் பரமாசார்யாள் திருவடித் தாமரைகளில் பலமுறை வணக்கத்துடன் இந்த மூன்றும் பதிப்பினை சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

**P. N. நாராயண சாஸ்திரிகள்**

[நூலாசிரியர்]

மேலமாம்பலம்
சென்னை-33
14—4—1974

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ சங்கர பகவத்பாத விஜயம்

श्रुति स्मृति पुराणानां आलयं करुणालयम् ।
नमामि भगवत्पाद शङ्करं लोकशङ्करम् ॥
जगतां गुरुवर्यञ्च कामकोटयधिपं शिवम् ।
चन्द्रशेखर योगीन्द्र देशिकं समुपास्महे ॥

## 1. அவதாரம்

புண்யபூமியாகிய நமது பாரத தேசத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்து பூமியின் பாரத்தைப் போக்கடித்து அர்ஜுனனை வ்யாஜமாக வைத்து ஸகல ஜனங்களுக்கும் ஆத்மவித்யையான ஸ்ரீ கீதையை உபதேசித்தார். அந்த கீதையிலேயே அடிக்கடி வைதிக தர்மமானது குறைவு படுமென்று கருதியே அம்மாதிரி வைதிக மார்க்கத்திற்குக் குறைவு ஏற்படும் போதெல்லாம் நானே அவதரித்து தர்மத்தை ஸ்தாபனம் செய்கிறேனென்று சொல்லியிருக்கிறார். அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் தன் ஸ்வரூபத்தை அடைந்த பிறகு உலகத்தில் விசேஷமாய் நமது பாரத தேசத்தில் அவைதிகமான நாஸ்திக பிரசாரங்கள் விசேஷமாகப் பரவி பௌத்தம், ஜைனம், காபாலிகம் கண்டதே காக்ஷி கொண்டதே கோலம் எனும் வகையில் விருத்தியடைந்து தர்மமார்க்கமும் அதற்கு மூலமான வேதம் சாஸ்த்ரம் ஆத்மவித்யை இவைகள் மறையும் நிலையை அடைந்தன.

அம்மாதிரி ஸமயத்தில்தான் நமது பகவத் பாதா சார்யாள் அவதரித்தார்கள்.

''கங்கையும் பிறையும் மற்றவு மறைத்து காலடியி னிலவதரித்து மங்கையாம் ஸரஸவாணியை ஜயித்து மதம் பலவற்றையுந் தொலைத்தே அங்கையின் நெல்லிக் கனியென விளங்க அத்வைத மதத்தினைத் தெரித்த சங்கர பகவத் பாதர் தம் பாதஸரோருகந் தலைக்கணியெமக்கே'' என்றபடி பிரம்மாதி தேவர்களால் உலகத்தில் உள்ள அதர்ம நிலையை யும் அக்ஞான இருளையும் தெரிவித்து ப்ரார்த்திக்கப்பட்ட பரமேச்வரன் கைலாஸத்தைவிட்டு இந்த பாரத தேசத்தில் அவதரித்தார்கள். ஆனந்த கிரீயசங்கர திக்விஜயம். மாதவீய சங்கர விஜயம், சித்விலாஸீய சங்கர விஜய விலாஸம், சிவரஹஸ்யம், இவைகளில் அம்பிகையால் கேட்கப்பட்ட ஸ்ரீ பரமேச்வரன், கலியில் பாபத்தைப் போக்கி புண்யத்தையும் ஆயுளையும் விருத்தி செய்யக்கூடிய உத்தம சரித்திரத்தை சொல்கிறேன் என்று ஆரம்பித்து ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் அவதாரம், விஜயம் முதலிய சரித்திர விசேஷத்தை விஸ்தாரமாக உபதேசித்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மாதிகளின் பிரார்த்தனைக் கிணங்க நானே சங்கரராக அவதாரம் செய்யப் போகிறேன் என்று சொன்னபடி ஈச்வராவதாரமே ஸ்ரீ பகவத் பாதாள் என்பது ஸித்தமாகிறது. வேதத்தில் ருத்ரத்திலும் ''வ்யுப்தகேசாயச'' என்கிற வாக்யமானது பரமேச்வரன் சிகையில்லாதவர் என்று சொல்கிறது, எந்த அவசரத் திலும் பரமேச்வரன் ஜடை இல்லாதவராகச் சொல்லப்பட வில்லை. இந்த ருத்ர மந்த்ரத்திற்கு பாஷ்யம் எழுதிய ஒரு பெரியார் ''சங்கராசார்ய ரூபேண அவதரிஷ்ய மாணுய'' என்று சொல்லி இருக்கிறபடியால் இந்த மந்த்ரமானது பரமேச்வரனின் அவதாரமான பகவத் பாதாளையே குறிக் கிறது. பகவத் பாதர்கள் அவதார காலத்தில் பௌத்தம், ஜைனம் முதலிய நாஸ்திக மதங்களாலும் கர்மாவே

பலனைக் கொடுக்கும், பலன் கொடுக்கும் ஈச்வரன் ஒருவன் அவசியமில்லை என்று சொல்லும் மீமாம்ஸம், ஸாங்க்யம் முதலிய ஆஸ்திக மதங்களாலும், லோகம் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் ஸமயம், சஸ்திரம் முதலிய ஆயுதங்கள் ஒன்றுமில்லாமல் சாஸ்திரம் ஒன்றையே பலமாகக்கொண்டு அவதரித்தார்கள். பகவான் அவதரிக்கும் இடமானது சிஷ்டர்களும் ஆசாரமுமுள்ள இடமாயிருக்குமென்பது பிரமாணம். நமது ஆசார்யாள் அவதரித்த இடமான கேரளதேசத்தில் இருப்பவர்கள் ஸ்ரௌதி அனுஷ்டானங்களையும் கர்மாக்களையும் அந்தந்த காலங்களில் செய்வது இப்போதும் காணப்படுகிறது. அந்த கேரள தேசத்தில் காலடி என்னும் கிராமத்தில், வித்யாதிராஜர் எனும் பிராம்மணோத்தமர் ஸகல வேதசாஸ்திர ஸம்பன்னராயும் சிஷ்டாசாரமுடையவராயும் இருந்து வந்தார். அவருடைய புத்ரர் சிவகுரு என்பவரும், பிதாவைப்போலவே எல்லா சத்குணங்களும் நிறைந்தவராயிருந்தார்.

சிவகுரு ஆர்யாம்பிகை என்னும் கன்னிகையை விவாஹம் செய்துகொண்டு கிருஹஸ்த தர்மத்தை நடத்தி வந்தார். அவருக்கு ஸர்வ ஸம்ருத்தியிருந்தும், புத்ர பாக்யமில்லாதவராய், கேரள தேசத்தில் உள்ள வ்ருஷாசலேச்வரரை ஆராதித்து, தபோனுஷ்டானம் செய்தார். பரமேச்வரன் அவருடைய ஸ்வப்னத்தில் தோன்றி, என்னுடைய அம்சபூதனும் ஸர்வக்ஞனும், லோகம் போற்றும் உத்தமனும், ஆனால் கொஞ்சமான ஆயுளையுடையவனுமான புத்ரன் உண்டாவான் என்று அனுக்ரஹித்து மறைந்தார். அதிலிருந்து பரமேச்வரன் தேஜஸ்ஸையே கர்ப்பமாயடைந்த ஆர்யாம்பிகை, நந்தன வைசாகசுக்ல பஞ்சமி ஆருத்ரா நக்ஷத்ரம் 5-கிரஹங்கள் உச்சமான காலத்தில் குழந்தையைப் பெற்றாள். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தனர். சிவகுரு மகிழ்ச்சியுடன் குழந்தைக்கு ஜாதகர்ம நாமகரணங்களைச் செய்தார். உலகத்திற்கு

க்ஷேமத்தை உண்டு பண்ணுவதற்காக ஆத்ரேயகோத்ரத்தில் அவதரித்த இந்தக் குழந்தையை சங்கரனெனப் பெயரிட்டு அழைத்தனர். 3-வது வயதில் ஸகல பாஷைகளின் ஞானமும், 4-வது வயதில் ஸகல சாஸ்திரங்களும் ஆசார்யாளை வந்தடைந்தன. இந்த ஸமயத்தில் பிதாவான சிவகுரு பூத சரீரத்தை விட்டு பிரம்மத்தில் கலந்தார். பிறகு தாயான ஆர்யாம்பிகை பந்துக்களைக் கொண்டு சங்கரருக்கு 5-வது வயதில் உபநயனம் செய்வித்து, வேத வித்யாப்யாஸம் செய்யும்படி அனுப்பினுள். வேத, வேதாந்த, வித்யைகள் எல்லாம் ஸாங்கமாய் ஆசார்யாளை வந்தடைந்தன.

## 2. கனகதாராஸ்தவம்

பிறகு ஆசார்யாள் பிரம்மசர்ய ஆச்ரமத்தை உலகத்திற்கு அனுஷ்டித்துக் காட்டுவதற்காக. வீடு, வீடாக நுழைந்து. பிக்ஷை கேட்டு வந்தார்கள். ஒரு ஏழை பிராம்மணர் வீட்டில் போய் பிக்ஷை கேட்க, அந்த வீட்டு அம்மாள் தேஜஸ்ஸோடு கூடிய இந்தக் குழந்தைக்குப் போட ஒன்றுமில்லையே என்று தரித்ர நிலையை நினைத்து வருந்தி ஒரு மூலையில் கிடந்த நெல்லிக்கனி ஒன்றை பிக்ஷாபாத்ரத்தில் போட்டாள். இவர்களுடைய நிலையை உணர்ந்த நம் ஆசார்யாள் ''அங்கம் ஹரே : புலக பூஷண மாச்ரயந்தீ'' என்று ஆரம்பிக்கும், ''கனகதாராஸ்தவம்'' ஸ்தோத்திரத்தின் மூலம் ஸ்ரீ மஹாலக்ஷ்மியை பிரார்த்தித்து ஒரு முகூர்த்த காலம் ஸ்வர்ண நெல்லிக்கனியாகவே வீடு முழுவதும் வர்ஷிக்கும்படிச் செய்து அந்த ஏழை ப்ராம்மணருடைய தரித்திரத்தைப் போக்கி ஸந்தோஷிக்கச் செய்தார்.

## 3. ஸந்யாஸம்.

ஸ்ரீ ஆசார்யாள் தன் 8-வது வயதில் ஸகல வேத சாஸ்த்ரங்களையும் அடைந்து ப்ரம்மவர்ச்சஸ்வியாக விளங்கினுர்

கள். தாயான ஆர்யாம்பிகை தன் புத்ரனுக்கு விவாஹம் செய்விக்க முயற்சித்தாள். ஆசார்யாள் துறவறமே மேற்பட்டதென்று வாதிக்க, தாயார் கிருஹஸ்தாச்ரமத்தை அவலம்பித்து தனக்கு த்ருப்தியளிக்க வேண்டுமென சொல்லி விவாதம் நடந்து வந்தது, ஒரு நாள் ஆசார்யாளும் தாயாரும் ஸ்னானத்திற்காக காலடியில் உள்ள சூர்ணி நதிக்குச் சென்று ஆசார்யாள், தாயாரை ஸ்னானம் செய்வித்துக் கரையேற்றி விட்டுப் பிறகுதான் ஸ்நாநம் செய்தார்கள். அப்பொழுது ஒரு முதலை காலைப் பிடித்துக் கொண்டது. ஆசார்யாள் தாயாரைப் பார்த்து முதலை காலைப் பிடித்துக்கொண்டு விட்டது. இப்பொழுது எனக்கு ஸன்யாஸம் பெற அனுமதி கொடுத்தால் முதலை விட்டு விடும், ஸன்யாஸத்தால் ஜன்மாவே மாறி விடுகிறபடியால் இந்த ம்ருத்யுபயம் நீங்கி விடும் என்று சொன்னார்கள். அதைக்கேட்ட தாயாரும் எப்படியாவது பிள்ளை பிழைத்தால் போதுமென்ற நோக்கத்துடன் ஸன்யாஸத்திற்கு அனுமதி கொடுத்தாள். உடனே ஆசார்யாள் ப்ரேஷோச்சாரணம் செய்து "அபயம் ஸர்வ பூதேப்யோ மத்த ஸ்வாஹா" என்பது முதலிய மந்திரங்களை உச்சரித்து, சிகை, யக்ஞோபவீதம் முதலியவைகளை விட்டு ஆபத் ஸன்யாஸமடைந்தார்கள். சாபத்தினால் முதலையாயிருந்த கந்தர்வன் ஆசார்ய பாத ஸ்பர்சத்தினால் சாபம் நீங்கி, ஆசார்யாளை ஸ்தோத்ரம் செய்து தன் லோகம் சென்றான். பிறகு ஆசார்யாள் நதியிலிருந்து கரையேறி வந்தார்கள். தாயார் வீட்டிற்கு வா என்று கூப்பிட்டாள். இனி நான் வீட்டிற்கு வரக்கூடாது. எனக்கு உலகெல்லாம் வீடுகள். எல்லோரும் என் தாய்கள் என்று தெரிவித்து நீ நினைக்கும் ஸமயம் வந்து உன் கார்யங்களை ஸரியாக நடத்துகிறேன் என்று சொல்லிவிட்டு ஆசார்யாள் தாயிடம் உத்திரவு பெற்று தனக்கு ஒரு ஸத்குருவைத்தேடிப் புறப்பட்டார்கள்.

## 4. குருபரம்பரை

ஒரு ஸமயம் பாற்கடலில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஆதி சேஷன் மீது பள்ளி கொண்டிருந்தார். பரமாத்மாவின் பாரம் தாங்கமாட்டாது சிரமபட்ட ஆதிசேஷன் திடீரென்று பாரம் அதிகமானதற்குக் காரணம் என்னவென்று பக வானிடத்தில் விஞ்ஞாபித்தார். ஸ்ரீ மஹாவிஷ்ணு, என் ஹ்ருதயத்தில் ஸ்ரீமன் நடராஜர் ஆனந்த தாண்டவம் செய்து கொண்டிருந்தார். அதை நான் தரிசித்து ஆனந்த மடைந்து கொண்டிருந்தபடியால் பாரம் அதிகமாயிற்று என்று சொன்னார். இதைக் கேட்ட ஆதிசேஷன் தானும் அந்த தாண்டவ தரிசனம் செய்ய விரும்புகிறேன் என்று பகவானிடத்தில் விஞ்ஞாபித்துக்கொண்டார். பகவானும் உனக்கு சிதம்பர க்ஷேத்ரத்தில் ஸ்ரீ நடராஜர் ஆனந்த தாண்டவ தரிசனம் கொடுப்பார். அதைத் தரிசனம் செய்து பாணிநீய வ்யாகரண சூத்திரங்களுக்கு மஹாபாஷ்யம் பண்ணி பிரசாரம் செய்துவிட்டு, இங்கு வந்து சேர் என்று ஆக்ஞாபித்தார். ஆதிசேஷனும் சிதம்பர க்ஷேத்ரத்தில் பதஞ்சலி மஹர்ஷியாக அவதரித்து, பரமேச்வரனை பிரார்த்தித்து கடுமையான தபஸ் செய்தார். ஸ்ரீ நடராஜர் க்ருபையுடன் பதஞ்சலிக்கு ஆனந்த தாண்டவ தரிசனம் கொடுத்து. பாணிநியின் வியாகரண சூத்திரங்களுக்கு மஹா பாஷ்யம் பண்ணி பிரவசனம் செய்து விட்டு உன் ஸ்வஸ்தானம் போய்ச் சேர் என்று அனுக்ரஹம் செய்து மறைந்தார். பதஞ்சலி மஹர்ஷியும் வ்யாகரண சூத்ரங்களுக்கு மஹாபாஷ்யம் செய்து முடித்தார் அதை தங்களுக்குப் பாடம் சொல்லும்படி 1000-பேர்கள் கேட்டுக்கொள்ள அப்படியே சிஷ்யர்களுக்கும் தனக்கும் நடுவில் ஒரு திரை போட்டு யாராவது திரையை விலக்கினால் மிகவும் அப்ரிய முள்ளவனாக ஆவான் என்று சொல்லி 1000-முகங்களாலும் 1000-பேர்களுக்கும் பாடம்சொல்ல ஆரம்பித்தார். இப்படி பாடம் சொல்லி வரும் சமயத்தில் சிஷ்யர்கள் இவர் எப்படி

1000 பேர்களுக்கும் தனித் தனியாகப் பாடம் சொல்லுகிருர் என்பதை பார்க்க ஆவலுடன் திரையை விலக்கிவிட ஆதி சேஷனுடைய விஷாக்னியால் எல்லோரும் பஸ்மம் ஆகிவிட்டார்கள். இப்படி நேர்ந்ததற்காக பதஞ்சலி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார். வெளியில் போயிருந்த ஒரு சிஷ்யன் வந்து தான் ஜலமோசனத்திற்குப் போயிருந்ததாயும் சொல்லாமல் போனதற்கு மன்னிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். கோபமடைந்த பதஞ்சலியும் சிஷ்யனை பிரம்மராக்ஷஸ்ஸாகப் போ என்று சபித்தார். சிஷ்யரால் கேட்டுக்கொள்ளப்பட்டவராய் உனக்கெதிரில் வரும் பண்டிதர்களையெல்லாம் 'பச்' தாதுவுக்கு 'நிஷ்டா' ப்ரத்யயம் சேர்ந்தால் என்ன ரூபமென்று கேள் 'பக்வம்' என்று சொல்பவருக்கு இந்த மஹா பாஷ்யத்தை உபதேசம் செய்துவிட்டு சாபம் நீங்கப்பெறுவாய் என அனுக்ரஹித்தார்.

பதஞ்சலி சிஷ்யரும் ஒரு ஆலமரத்தில் ஏறிவருபவர்களையெல்லாம் இந்த கேள்வியைக் கேட்டு ஸரியாய் பதில் சொல்லாதவர்களை பிரம்மரக்ஷஸ் ஆனபடியால் சாப்பிட்டும் வந்தார். ஒரு சமயம் வடக்கேயிருந்துவந்த ஒருபிராம்மணன் சரியாக "பக்வம்" என்று பதில் சொன்னுர். பதஞ்சலி சிஷ்யரும் அவரை நீ யார் என்று கேட்டு மகாபாஷ்யம் பாடம் கற்றுக்கொள் என்று சொன்னுர். அவனும், தன் பெயர் சந்திரகுப்தன் என்றும் வியாகரண பாஷ்ய பாடம் கேட்கவே வந்ததாயும் தெரிவித்தான், அவரும் அப்படியே பாஷ்ய பாடம் சொல்லிக்கொண்டு வந்தார். சந்திரகுப்தனும் அவர் பாடம் சொல்லியதை அந்த மரத்து ஆல இலையிலேயே துடையைக் கீறி ரத்தத்திஞல் ஆலிலைகளில் முழுவதையும் எழுதி முடித்தான். பதஞ்சலி சிஷ்யரும் சாபம் நீங்கப் பெற்று சுகப்ரம்மத்தினிடம் ஸன்யாஸம் பெற்றுக் கௌடபாதர் என விளங்கினுர், சந்திரகுப்தனும் இப்படி 2 மாதம் ஆஹாரம் நித்ரை இல்லாமல் சிரமப்பட்டு ஆலிலையில்

எழுதிய மஹாபாஷ்ய மூட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினர். வழியில் களைப்பினல் ஒரு வீட்டில் தீர்த்த பானம் செய்து அந்த மூட்டையை தலையின் கீழ்வைத்துக் கொண்டு தூங்கிவிட்டார். அந்த இலைகளை ஆடுகள் பாதிக்குமேல் தின்றுவிட்டன, விழித்துக் கொண்டு பார்த்து பாக்கியிருந்த இலைகளை எடுத்துக் கொண்டு கிளம்பினர். இதுவே "அஜபக்ஷிதபாஷ்யம்" என வழங்குகிறது. சந்திரகுப்தனும், வரும் மார்க்கத்தில் நான்கு ஸ்திரீகளை மணந்து வரருசி, விக்ரமார்க்கன். பட்டி பர்த்ருஹரி, ஆகிய நான்கு பிள்ளைகளையடைந்து அவர்களுக்குப் பாஷ்யத்தை சொல்லி வைத்து விட்டு, பிறகு கௌடபாதரிடம் ஸன்யாஸம் பெற்றுக் கோவிந்த யோகீந்த்ரர் என பதரிகாச்ரமத்தில் விளங்கி வந்தார்.

## 5. குருதர்சனம்

தனக்குத் தகுந்த குருவைத் தேடிச் சென்ற நமது ஆசார்யாள், பல க்ஷேத்திரங்கள் சென்று கடைசியில் நர்மதா நதிக்கரையை அடைந்து அந்த ஸமயம் அங்கு வஸித்த கோவிந்த பகவத்பாதரை தரிசனம் செய்து நமஸ்கரித்தார். அப்பொழுது நர்மதா நதி பெருக்கெடுத்தோட அதனல் ஜனங்கள் சிரமத்தை அடைவதைக்கண்ட சங்கரர் அந்த ப்ரவாஹத்தைத் தன் கமண்டலுவில் அடக்கி விட்டார். இவ்வளவு பெருமை வாய்ந்தவரைக் கண்ட ஜனங்களுடைய சப்தத்தினுல் ஸமாதிகலைந்த ஸ்ரீகோவிந்த பகவத்பாதர், ஸ்ரீசங்கரரை நீ யார் என்று கேட்டார். ஆசார்யாள் அதற்கு பதில் சொல்லும் வாயிலாக ஸகல வேதாந்தங்களையும் உள்ளடக்கிய,

न भूमिर्नतोयं न तेजो न वायुः
न खं नेन्द्रियंवा न तेषां समूहः ।

अनेकान्तिकत्वात् सुषुप्त्येक सिद्धः
तदेको विशिष्टः शिवः केवलोहम् ॥

"பூமி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், இந்திரியங்கள் இவைகளின் கூட்டம் முதலிய ஒன்றும் நானல்ல. முடிவற்றதாயும், ஸுஷுப்தியிலும் அறியக் கூடியதும் எங்கும் நிறைந்ததான இரண்டற்ற பிரம்மமே நான்" என்று ஆரம்பித்து 10 சுலோகங்களால் பதில் சொன்னார். "தசச்லோகி" என்னும் இந்த கிரந்தத்திற்கு ஸ்ரீ மதுசூதன ஸரஸ்வதி முதலிய பெரியோர்கள் வ்யாக்யானம் செய்து இருக்கிறார்கள். இவ்வாறு தசச்லோகியைக் கேட்ட கோவிந்த பகவத்பாதர் ஆசார்யாளைப் போன்ற உத்தம சிஷ்யனை அடையும்படியான பாக்யம் கிடைத்ததே என ஸந்தோஷமடைந்து ஆசார்யாளுக்கு உபதேசம் செய்து, காசிக்குச் சென்று வ்யாஸருடைய ப்ரம்ம சூத்திரங்களுக்கு பாஷ்யம் பண்ணி பிரசாரம் செய் என ஆக்ஞாபித்தார். குருவினுடைய ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டு கிளம்பிய ஆசார்யாள் காசி க்ஷேத்திரத்தை அடைந்து ப்ரம்ம ஸூத்திரங்களுக்கு பாஷ்யம் செய்து சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார்.

## 6. பத்மபாதர் வரலாறு :

தென்னாட்டில் சோழ தேசத்தைச் சேர்ந்த காவிரிக்கரை வாஸியான ஸனந்தனர் என்னும் ப்ராம்மணச் ச்ரேஷ்டர் ஸம்ஸாரத்தில் வெறுப்புற்று, ஞானோபதேசத்திற்குத் தகுந்த ஸத்குருவைத் தேடியலைந்து, கடைசியாக காசி க்ஷேத்திரத்தை அடைந்து ஆசார்யாள் அநேகம் சிஷ்யர்களுக்கு அத்வைத தத்துவத்தை உபதேசித்துக் கொண்டு இருப்பதைக் கண்டு அவர் பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்கி தனக்கு உபதேசம் செய்யவேண்டுமென ப்ரார்த்

தித்தார். ஆசார்யாளும் அவருக்கு ஸன்யாஸம் கொடுத்து ஆத்ம வித்யையை உபதேசம்பண்ணி, முக்ய சிஷ்யராகக் கொண்டார்கள். ஆசார்யாள் இவரிடம் அதிக பிரியத்தோ டிருப்பதைக் கண்ட மற்ற சிஷ்யர்களுக்குப் பொறாமை உண்டாயிற்று. அதைப் போக்குவதற்காக ஒரு ஸமயம் ஆசார்யாள் கங்கை நதியின் ஒரு கரையிலிருந்து கொண்டு மற்றொரு கரையிலிருந்த ஸனந்தனரை வஸ்த்ரம் கொண்டு வா என ஆஞ்ஞாபித்தார். ஸனந்தனர் வெள்ளத்தையும் யோசிக்காதவராய் குரு பக்தியை முன்னிட்டு வஸ்திரத் துடன் கங்கையில் இறங்கிவிட்டார். அவருடைய குருபக்தி யைக் கண்ட கங்காதேவியும் அவருடைய ஒவ்வொரு அடி யிலும் தாமரைப் புஷ்பத்தை வைத்து ஸௌக்யமாய்க்கரை சேர்த்தாள். இவருடைய குருபக்தியின் பெருமையைக் கண்ட மற்ற சிஷ்யர்களும் பொறாமை நீங்கப்பெற்றார்கள். இது முதல் ஸனந்தனர் பத்மபாதர் என்னும் பெயருடன் ஆசார்யாளால் அழைக்கப்பட்டு எல்லோராலும் கொண் டாடப்பட்டார்.

## 7. மனீஷா பஞ்சகம், வியாஸ தர்சனம் :

ஆசார்யாள் மணிகர்ணிகா ஸ்னானத்திற்குப் போகும் பொழுது எதிரில் விச்வேச்வரர் 4 நாய்களுடன் சண்டாள ரூபியாய் வந்தார். அவனை தூர விலகிப்போ என்று சொன்னார். அதற்குச் சண்டாள ரூபியான விச்வேச்வரன் "அன்னமயமான இந்த சரீரத்தையா? அல்லது உள்ளே விளங்கும் சைதன்யத்தையா? எதைப் போகச் சொல்லு கிறாய்"? என்றும் "கங்கா ஜலத்தில் தோன்றும் சூர்ய னுக்கும், குடத்தில் தோன்றும் சூர்யனுக்கும் பேதம் உண்டா? மண்பாத்திரத்தில் தோன்றும் ஆகாசத்திற்கும், தங்கப்பாத்திரத்தில் தோன்றும் ஆகாசத்திற்கும் பேதம் உண்டா? இம்மாதிரி பேதம் எப்படி வந்தது"? என்றும் கேட்டார். இதைக் கேட்ட ஆசார்யாள் :

"जाग्रत्स्वप्न सुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
याब्रह्मादि पिपीलिकान्त तनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं नच दृश्य वस्त्विति दृढ प्रज्ञापि यस्यास्तिचेत्
चण्डालोस्तु सतु द्विजोस्तु गुरुरित्येषा मनीषा मय" ॥

"ஜாக்ரம், ஸ்வப்னம், தூக்கம் இவைகளில் விளங்கும் சக்தியும், ப்ரும்மா முதல் புழு வரையில் உள்ள சரீரங்களில் வ்யாபித்திருப்பதும் இந்த உலகத்திற்கு ஸாக்ஷியாகவு முள்ள பிரம்மத்தை நானே அது, காணப்படும் வஸ்துக்கள் நானல்ல என்னும் நிச்சயமான ஞானம் எவனுக்கு இருக்கிறதோ அவன் சண்டாளனுகை இருந்தாலும் பிராம்மணனுகை இருந்தாலும் எனக்கு குரு" என்று ஆரம்பிக்கும் "மனீஷா பஞ்சகம்" என்னும் 5 சுலோகங்களைச் சொல்லி நமஸ்கரித்தார்கள். உடனே விச்வேச்வரன் ஸ்வஸ்வரூபத்துடன் காக்ஷியளித்து, லோகத்தில் அத்வைத வித்யையைப் பிரசாரம் செய்து பிறகு என்னிடம் வந்துசேர் என்று அனுக்ரஹித்து மறைந்தார். பிறகு ஒரு ஸமயம் பாஷ்ய பாடம் சொல்லிக்கொண்டிருக்கும்போது வியாஸர் கிழ ப்ராம்மண வேடம் பூண்டு ஆசார்யாளிடத்தில் வந்து கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். அநேக நாட்கள் வாதம் செய்தும், வாதம் முடிவடையாததைக் கண்ட பத்மபாதர், வியாஸரின் உண்மை ஸ்வரூபத்தைத் தெரிந்து மஹா விஷ்ணுவான வியாஸரும், ஈச்வரரான சங்கரரும் விவாதம் செய்யும்போது நான் என்ன செய்யமுடியும் என்று சொன்னுர். உடனே வியாஸர் தன் நிஜ ஸ்வரூப தரிசனம் கொடுத்து என்னுடைய ஸுத்திரங்களுக்கு நீ செய்திருக்கும் பாஷ்யம்தான் ஸரியான பாஷ்யம், இதை உலகத்தில் பிரசர்ரம் செய்து நாஸ்திக மதங்களைக் கண்டித்து, அத்வைதத்தை ஸ்தாபித்து பிறகு ஸ்வஸ்தானம் போகலாமென்று

சொல்லி 16 வயதை அடைந்திருந்த ஆசார்யாளுக்கு மேலும் 16 வயது அனுக்ரஹம் செய்து மறைந்தார்.

## 8. குமரிலபட்டர், மண்டனமிச்ரர் வரலாறு :

வியாஸருடைய ஆக்ஞையை முன்னிட்டு ஆசார்யாள் காசியை விட்டுக் கிளம்பி ப்ரயாகை க்ஷேத்திரத்தை அடைந்து உத்தமமான கங்கை, யமுனை, ஸரஸ்வதி மூன்றும் சேருமிடமான திரிவேணியில் விதிப்படி ஸ்னானம் செய்தார்கள். அந்த ஸமயம் பௌத்த மதத்தை நாசம் செய்து கர்ம மார்க்கத்தை ஸ்தாபித்த ஸுப்ரமண்ய அவதாரமான குமரிலபட்டர் துஷாக்னியில் பிரவேசிப்பதைக் கேட்டு தன் பாஷ்யத்தைச் சொல்ல அவரிடம் சென்றார். குமரிலபட்டர், பௌத்த குருவிடமிருந்து கற்ற பௌத்த மதத்தையே நாசம் செய்து குருத்ரோஹம் பண்ணிய பாபத்திற்காகவும், மீமாம்ஸ மதத்தை ஸ்தாபிக்கவேண்டி ஈச்வரன் இல்லை என்று சொன்ன பாபத்திற்காகவும் உமிக் காந்தல் அக்னியில் பிரவேசம் செய்து கொண்டிருக்கிறேன் என்னுடைய சிஷ்யனும், சிறந்த மீமாம்ஸகனும் மாஹிஷ்மதீ நகரத்தில் வஸிப்பவனுமான, மண்டனமிச்ரனிடம் சென்று அவனைத் திருப்புங்களென்று சொல்லி ஆசார்யாளுக்கு விடைகொடுத்தார். பிறகு ஆசார்யாள் மாஹிஷ்மதீ நகரம் அடைந்து, பெண்கிளிகள் முதல் வேதவிசாரம் செய்யும் மண்டனமிச்ரர் வீட்டை அடைந்தார். அந்த ஸமயம் மண்டனமிச்ரர், ஜைமினி மஹர்ஷியையும், வ்யாஸ மஹர்ஷியையும் நிமந்தரணம் வைத்து பித்ரு சிராத்தம் பண்ணிக்கொண்டு இருந்தார். வாசற் கதவு மூடப்பட்டிருந்த படியால் ஸ்ரீ சங்கரர் யோக சக்தியினால் உள்ளே குதித்து எதிரில் நின்றார். இவரைக் கண்ட மண்டனமிச்ரர் தூஷிக்க ஆரம்பித்தார், வ்யாஸ வாக்யத்தினால் ஆசார்யாளைத் தெரிந்துகொண்ட மண்டனமிச்ரர் ஆசார்யாளை விஷ்ணு ஸ்தானத்தில் நிமந்த்ரணம் இருக்க ப்ரார்த்தித்தார்

ஆசார்யாள் வாதபிக்ஷை வேண்டுமெனத் தெரிவித்தார்கள். சிராத்தம் முடிந்து ஜைமினியும் வியாஸரும் மறைந்தார்கள். மறுநாள் அனுஷ்டானத்தை முடித்துக்கொண்டு மண்டன மிச்ரருடைய பத்னியும் ஸரஸ்வதியின் அவதாரமுமான ஸரஸவாணியை மத்யஸ்தமாகவைத்து, தோற்றவர் ஜயித்தவருடைய ஆச்ரமத்தைக் கைக்கொள்ள வேண்டு மெனும் நிபந்தனையுடன் வாதம் ஆரம்பிக்கப்பட்டது. ஸரஸவாணியும் இரண்டு மாலைகளை இரண்டு பேருக்கும் கொடுத்து யார் மாலை வாடுகிறதோ அவரே தோற்றவர் என்று சொல்லி, வீட்டு கார்யத்தை கவனித்தாள். இரண்டு பேருக்கும் அநேக நாட்கள் வாதம் நடந்தது. ஒரு நாள் மண்டன மிச்ரர் கழுத்துமாலை வாடிவிட்டது. ஸ்ரீ ஆசார் யாள் ஜயத்தைக் கண்ட தேவர்கள் புஷ்பவர்ஷம் வர்ஷித் தார்கள். ஸரஸவாணியும், தன் பதியான மண்டனர் தோற்று விட்டதால் ஆசார்யாளுடைய ஆச்ரமமாகிய ஸன்யாஸம் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று நிச்சயித்து, இரண்டு பேர்களையும் பிக்ஷைக்கு அழைத்தாள். பிறகு மண்டனமிச்ரரும் ஆசார்யாளை ப்ரார்த்தித்து ஸன்யாஸம் வாங்கிக்கொண்டு, ஸுரேச்வராசார்யாள் என்னும் பெயருடன் வார்த்திகம், நைஷ்கர்ம்ய ஸித்தி முதலிய க்ரந்தங்களைச் செய்து பிரஸித்தியாய் விளங்கினர். ஸரஸ்வதி ரூபத்தை யடைந்த ஸரஸவாணியை தன்னுடன் வரும்படி ஆசார்யாள் கேட்டுக்கொள்ள, திரும்பிப்பார்க்கு மிடத்தில் நின்று விடுவேன் என்னும் நிபந்தனையுடன் பின் தொடர்ந்தாள்,

## 9. பத்ரீ, கேதாரம், கைலாஸம் செல்லுதல் :

ஆசார்யாள் மாஹிஷ்மதீ நகரத்தை விட்டு புறப்பட்டு ஹிமாலயத்தில் பத்ரீ, கேதார், யாத்ரையாய் வரும் ஸமயம் அங்குள்ள ஒரு குகையில் நிஷ்டையிலிருந்த கௌட பாத ரையும் கோவிந்தபகவத்பாதரையும் கண்டு தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் இயற்றி நமஸ்கரித்தார்.

"विश्वं दर्पणदृश्यमाननगरी तुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनिमायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्री गुरु मूर्तये नम इदं श्री दक्षिणामूर्तये ॥

இம்மாதிரி 8-சுலோகங்களைக் கேட்டு நிஷ்டை கலைந்து கௌட பாதரும் கோவிந்த பகவத் பாதரும் அனுக்ரஹம் செய்தார்கள். ஆசார்யாளும் தான் செய்த பாஷ்யத்தை அவர்களுக்குக் காட்டி பிரார்த்திக்க, அவர்களும் ஆனந்தம் அடைந்தார்கள், பிறகு ஆசார்யாள் கங்கோத்ரி சென்று அங்கு தபஸ் பண்ணி அங்கு ஸப்தகோடி மஹா மந்திரங்களும் ஸித்தியடையப் பெற்று, பரமேச்வரன் தரிசனத்திற்காக கைலாஸம் சென்று ஈச்வரனை ஸதோத்ரம் செய்து பிரார்த்தித்தார். பரமேச்வரன் 5-ஸ்படிக லிங்கங்களை அனுக்ரஹம் செய்து கொடுத்தார். மந்த்ர சாஸ்திரங்களை உள்ளடக்கியதாகவும் பிரம்மவித்யா ஸ்வரூபிணியான அம்பாளின் ஸ்வரூபாநந்தத்தை அள்ளி வீசுவதுமான "ஸௌந்தர்ய லஹரீ" என்னும் ஸ்தோத்ரத்தையும் செய்தார்கள்.

शिवश्शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुम्
नचेदेवं देवो नखलुकुशलस्पन्दितुमपि ।
अतस्त्वामाराध्यां हरि हर विरिञ्चादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कथमकृत पुण्यः प्रभवति ॥

"அம்பிகையோடு கூடிய பரமேச்வரன் கார்யங்களைச் செய்வதில் ஸமர்த்தராகிறார். அப்படி இல்லாவிடில் அவரால் நகரவும் முடியாது. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்

களால் பூஜிக்கத் தகுந்த அம்பிகையை ஸ்தோத்ரம் செய்ய வோ நமஸ்கரிக்கவோ புண்யம் செய்யாதவர்கள் எப்படி சுத்தர்கள் ஆவார்கள்'' முதலான 100-சுலோகங்களால் ஸௌந்தர்ய லஹரியைச் செய்தார்கள். பிறகு அங்கிருந்து பதரிகாசிரமம்வந்து கைலாஸத்திலிருந்து கொண்டுவந்த 5-ஸ்படிக லிங்கங்களில் ஒன்ருன முக்தி லிங்கத்தை ஸ்தாபித்து, ஜோதிர் பீடத்தை ஸ்தாபித்து, மட நிர்மாணமும் செய்தார்கள். அங்கு குளிரால் சிரமப்பட்ட ஜனங்களுக்காக பத்ரீநாதனைப் பார்த்து உஷ்ணோதகம் கொடுக்கும்படி வேண்டிக் கொண்டார். நாராயணரும் தன் பாதத்தின் அடியிலிருந்து உஷ்ணோதகத்தைவிட,அது ஒரு குண்டமாகி ஜனங்களின் குளிரை நீக்கியது. விறைத்துப்போகும் பனிக்கட்டி உறையும் அந்த இடத்தில், ஸ்னானத்திற்கு கொதிக்கும் வெந்நீர் கிடைப்பது பகவத்பாதாளின் மஹிமாதிசயத்தைத் தெரிவிக்கிறது. கேதாரத்தில் ஜ்யோதிர் லிங்கமான கேதார நாதனையும், பத்ரியில் பத்ரீநாதனையும் ப்ரதிஷ்டை செய்து பூஜித்தார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்ட ஆசார்யாள் நேபாள க்ஷேத்ரத்தை அடைந்து பசுபதிநாதனை தரிசனம்செய்துபுத்தமதஸ்தர்களையெல்லாம் வாதத்தில் வென்று நீலகண்ட க்ஷேத்ரம் அடைந்து 5-லிங்கங்களில் ஒன்ருன ''வர'' லிங்கத்தை அங்கு ஸ்தாபித்து அங்கிருந்து புறப்பட்டு வந்துகொண்டிருக்கும் வழியில் பல துர்மதங்களைக் கண்டித்தார்கள்.

## 10. காளிகாபீட விமலாபீட ஸ்தாபனம் :

இவ்விதம் ஆசார்யாள் அநேக க்ஷேத்ர தரிசனம், தீர்த்தாடனம் முதலியன செய்து மேற்கு ஸமுத்ரக் கரை அடைந்து, துவாரகையில் ஸ்ரீகிருஷ்ணனை தரிசனம் செய்து ''காளிகாபீடம்'' ஸ்தாபித்து மட ப்ரதிஷ்டையும் செய்து ஸந்தோஷித்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு பல க்ஷேத்ர தரிசனம் செய்து கொண்டு கிழக்கு ஸமுத்ரக்கரை வந்து

ஜகன்னாதம் என்னும் பூரிக்ஷேத்ரத்தில் விமலாபீடம் ஸ்தாபித்து கோவர்த்தன மடம் நிர்மாணம் செய்து விட்டு புறப்பட்டார்கள்.

## 11. காபாலிகன் வரலாறு:

ஆசார்யாள் துர்மதங்களைக் கண்டனம் செய்து கொண்டு வரும் ஸமயம், பைரவ ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த காபாலிகன் ஒருவன் ஆசார்யாளை வாதத்தில் ஜயிக்க முடியாதெனத் தெரிந்து தந்திரத்தால் கொன்று விட நினைத்து தனியாய் இருக்கும் ஸமயம் ஆசார்யாளிடம் வந்து தெரிவித்தான். நான் ஒரு யாகம் செய்ய நிச்சயித்திருக்கிறேன். அதற்கு ஒரு சக்ரவர்த்தியினுடைய சிரஸ்ஸையாவது ஒரு க்ஞானியினுடைய சிரஸ்ஸையாவது அக்னியில் ஹோமம் செய்தால் பரமேச்வரன் ப்ரீதியடைவார். சக்ரவர்த்தியின் சிரஸ் எனக்குக் கிடைக்காது. உலகத்தைத் துறந்த தாங்கள் சிரஸ்ஸைக் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். ஆசார்யாளும் அவன் வேண்டுகோளுக்கிணங்கி நான் தனியாய் இருக்கும் ஸமயம் வந்து தலையைக்கொண்டு போய்விடு. சிஷ்யர்கள் பார்த்தால் ஒத்துக்கொள்ள மாட்டார்கள் என்று சொன்னார். ஒரு ஸமயம் ஆசார்யாள் தனியாக ஸமாதி நிலையில் உலகத்தை மறந்து நிற்கும் போது காபாலிகன் வந்து கத்தியை ஓங்கி தலையை வெட்டயத் தனித்தான். அந்த ஸமயம் பத்மபாதர் நதியில் ஸ்நாநம் செய்துகொண்டிருந்தவருக்கு நரஸிம்ம ஆவேசம் வந்து ஆசார்யாளிடத்தை அடைந்து காபாலிகனுடைய உடலைக் கிழித்துப் போட்டார். ஆசார்யாள் நிஷ்டை கலைந்து பார்த்து நரசிம்ம மூர்த்தியை ஸ்தோத்ரம் செய்து உக்ரத்தைத் தணித்தார், பத்மபாதரைப் பார்த்து இந்த நரசிம்மோபாஸனம் எப்பொழுது உனக்குண்டாயிற்று என்று கேட்டார். பத்மபாதர் ஒரு ஸமயம் நான் நரசிம்ம மூர்த்தியைப் பிரார்த்தித்து தபஸ் பண்ணிக்கொண்டிருந்தேன். பகவான்

பிரத்யக்ஷமாகாமல் நான் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும் போது ஒரு வேடன் வந்து நீர் என்ன செய்கிறீர் என்று கேட்டான். நான் நரஸிம்ம மூர்த்தியின் தரிசனத்திற்காக தபஸ் செய்வதாகச் சொன்னேன். அவனும் அவர் எப்படி இருப்பாரென்று சொன்னால் நான் கொண்டு வருகிறேன். ஸாயங்காலம் வரையில் தேடி அதே தியானமாய் சிரமப் பட்டு கடைசியில் பகவான் அவனுக்கிறங்கி மனிதனும் சிங்கமும் கலந்த உருவாய் தென்பட்டார். நரஸிம்மத்தை கட்டிக்கொண்டு வந்து இதோ பார் என்று சொன்னான். கண்ணுக்குத் தெரியாமல் நான் வருத்தப்பட்டு இந்த வேடனுக்கு கிடைத்த பாக்யம் எனக்குக் கிடைக்கவில்லை யே என்று நினைத்து ஸ்தோத்ரம் செய்தேன். உடனே நரஸிம்ம மூர்த்தி தோன்றி, வேடன் அதே தியானமாய் தேடியபடியால் அவனுக்கு தரிசனம் கொடுத்தேன். உனக்கு எப்பொழுது வேண்டுமானாலும் வருகிறேன் என்று அனுக்ரஹம் செய்து மறைந்தார். வேடனும் மறைந்து விட்டான். இப்பொழுது நதியில் ஸ்நாநம் செய்து கொண்டிருந்தேன். நரஸிம்மம் வந்ததும் இவனைக் கொன்றதும் எனக்குத் தெரியாது என்று பத்மபாதர் ஆசார்யா ளிடம் விக்ஞாபித்து அனுக்ரஹம் பெற்றார்.

## 12. ஹஸ்தாமலகர்—தோடகாசார்யர் :

ஆசார்யாள் யாத்ரா மார்க்கமாய் கோகர்ணம்சேர்ந்து அங்கு ஈச்வர தர்சனம் செய்து இறந்த குழந்தையை உயிர்ப் பித்து பெற்றோர்களை ஸந்தோஷிக்கச் செய்தார். மூகாம்பிகா க்ஷேத்ரம் சென்று அம்பிகையைத் தர்சனம் செய்து ஸ்தோத் ரம் செய்தார். பிறகு ஸ்ரீபலி என்னும் கிராமம் சேர்ந்து அங்கு பிரபாகரர் என்னும் பிராம்மணருடைய குழந்தை ஊமையாயிருப்பதைக் கண்டு தகப்பனார் தன்னிடம் கொண்டுவிட்ட குழந்தையைப் பற்றி விசாரித்தார். ஊரில் எல்லோரும் ஜடன் என்றே அழைப்பதால் நானும் 'ஜடா என்றே கூப்பிடுகிறேன் என்று தகப்பனார் தெரிவித்தார்.

ஆசார்யாள் அந்தக் குழந்தையை ஜடா என்று கூப்பிட்டார் ஊமையாயிருந்த குழந்தை பேச ஆரம்பித்து, ''நாஹம் ஜட: கிந்து ஜட: ப்ரவர்த்ததே'' என்பது முதலான 12-சுலோகங்களால் பரமாத்மாவே நான் என்று சொல்லிற்று. குழந்தை பேசி விட்டானென நினைத்த தகப்பனார் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போனார். அங்கு மறுபடி ஊமையாயிருப்பதையும், ஆசார்யாளிடத்தில் கொண்டுவிட்டால் பேசுவதையும் கண்ட அந்த பிராம்மணர் அவனை ஆசார்யாளிடத்திலேயேவிட்டு விட்டார். ஆசார்யாளும் அவருக்கு ஸன்யாஸம் கொடுத்து ஹஸ்தாமலகர் என்னும் பெயரையும் அனுக்ரஹம் செய்து முக்ய சிஷ்யர்களில் ஒருவராகக் கொண்டார். ஆசார்யாளுடைய சிஷ்யர்களில் ஒருவரான கிரி என்பவர் சற்று புத்தி குறைவாயிருந்தார். ஒருநாள் பாஷ்யபாடம் சொல்லும்போது கிரி வர தாமதமாயிற்று. ஆசார்யாள் அவருக்காக காத்திருக்க, மற்ற சிஷ்யர்கள் அவரை குறைவாகப் பேசவே, ஆசார்யாள் அங்கிருந்த படியே கிரி என்பவர்க்கு ஸகல சாஸ்த்ரங்களையும் தெரியும்படி அனுக்ரஹம் செய்தார்கள். கிரியும் வரும்போதே **विदिताखिल शास्त्र सुधाजलधे महितोपनिषत् कथितार्थ निधे हृदये कलये विमलं चरणं भवशङ्कर देशिक मे शरणम् ॥** "எல்லா சாஸ்திரங்களையும் தெரிந்தவரும் உபநிஷத் அர்த்தங்களை பிரவசனம் செய்யும் தங்கள் சரணத்தை தியானம் செய்கிறேன். ஹே சங்கர குருவே சரணம்'' என்பது முதல் 8-சுலோகங்கள் சொல்லிக்கொண்டே வந்தார். ஆசார்யாள் ஸந்தோஷமடைந்து தோடக விருத்தத்தில் சுலோகங்கள் சொல்லிக்கொண்டே வந்தமையால் தோடகாசார்யர் எனப் பெயரிட்டு அழைத்தார்கள்.

## 13. சிருங்கேரி மடம்-சாரதா பீட ஸ்தாபனம்:

ஆசார்யாள் வந்துகொண்டே இருக்கும் போது கர்நாடக தேசத்தில் துங்கபத்ரா நதிதீரத்தில் 'ரிச்யசிருங்கர்'

முதலிய மஹர்ஷிகளாலும் தேவதைகளாலும் ஆச்ரயிக்கப் பட்டதும், ஜீவராசிகள் வைரபுத்தியை விட்டு ஒன்று கூடி வஸிக்கும் உத்தம க்ஷேத்ரமான ச்ருங்கேரி வந்தார். பின்னே லேயே வந்துகொண்டிருந்த ஸரஸ்வதியின் பாத சிலம்புகள் அங்கு ஆற்று மணலில் புதைந்து சப்தம் இல்லாமற் போக வே, சப்தம் கேட்கவில்லை யென்று ஆசார்யாள் திரும்பிப் பார்த்தார்கள். ஸரஸ்வதி அங்கேயே கோயில் கொண்டு விட்டாள். ஆசார்யாள் அந்த உத்தம க்ஷேத்ரத்திலேயே ஸாரதா பீடம் ஸ்தாபித்து, மடம் ஏற்படுத்தி, போகலிங்க சந்த்ரமௌளீச்வரரையும் ஸ்தாபித்து பாரதி ஸம்ப்ர தாயத்தைச் சேர்ந்த சிஷ்யர்களை அங்கு தத்துவோபதேசத் திற்கும் மடபரிபாலனத்திற்கும் நியமித்தார்கள். இந்த சாரதா பீடத்திற்கு ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளை தலைவராக நியமித்ததாக ஸ்ரீ மாதவீய சங்கர விஜயமும் ஸ்ரீ சித் விலாஸீய சங்கர விஜயமும் சொல்லுகிறது. ஆனந்தகிரீய சங்கர திக் விஜயம் பத்மபாதர் தலைவர் எனச் சொல்லு கிறது.

எப்படியாயிருந்தாலும் ஸ்ரீசாரதாம்பாளின் அனுக்ர ஹத்தினல் இப்பொழுதும் இந்த பீடத்தில் உள்ளவர்கள் வித்வான்களாயும், யோகிகளாயும் விளங்குகிருர்கள்.

## 14. மாத்ரு கிருத்யம்.

இந்த ஸமயம் தாயார் அந்த்ய காலம் வந்து தன்னை நினைத்ததைத் தெரிந்த ஆசார்யாள் யோக சக்தியினல் மாதாவின் ஸமீபம் சேர்ந்து சிவபுஜங்கம், விஷ்ணு புஜங்கம் இவைகளால் ஸ்தோத்ரம் செய்ய, விஷ்ணுபார்ஷதாள் வந்து விமானத்தில் வைகுண்டம் அழைத்துச் சென்றனர். மாத்ரு சரீர ஸம்ஸ்காரத்திற்கு, ஸன்யாஸி கர்மா செய் வதற்கு அர்ஹமில்லை என்று சொல்லி ஸஹாயத்திற்கு வர மறுத்தார்கள். ஆசார்யாள் மாத்ரு சரீரத்தை வீட்டுக் கொல்லையிலேயே வைத்து யோகாக்னியால் தஹனம்

செய்து மாத்ரு கர்மாவை முடித்தார்கள். காலடி அக்ர ஹாரத்திற்கு சாபமும் கொடுத்தார்கள் இப்பொழுதும் அங்கு கொல்லைப்புறத்தையே ஸ்மசானமாக்கி தஹனம் செய்கிறார்கள் என்று தெரிகிறது. இப்பொழுது அங்கு சிருங்கேரி ஆசார்யாள், சாரதாம்பாள் ஆலயமும், ஸ்ரீ ஆசார்யாள் ஆலயமும் கட்டி பிரதிஷ்டை செய்து இருக் கிறார்கள்.

## 15. திக்விஜயம் :

ஆசார்யாள் ராமேச்வரம் முதலிய க்ஷேத்ரங்கள் தரி சனம் செய்யப் புறப்பட்டு ஆங்காங்கு அத்வைதமதத்தை ஸ்தாபித்து துர்மதங்களையெல்லாம் கண்டித்து யதிஸார்வ பௌமராய் பிரகாசித்தார்கள். ஜம்புகேச்வரத்தில் அகிலாண்டேச்வரியின் உக்ரகலையைத் தணித்து எதிரில் மஹாகணபதியை ஸ்தாபித்து அம்பாளுக்கு தாடங்க பிர திஷ்டையும் செய்தார்கள். திருப்பதியில் ஸ்ரீவெங்கடேசன் ஸன்னிதியில் தனாகர்ஷண யந்திரம் ஸ்தாபித்தார்கள். சென்னை ஸமீபமுள்ள திருவொற்றியூரில் திரிபுரஸுந்தரி யின் உக்ரகலையைத் தணித்து மற்றொரு வன துர்க்கையின் உக்ரகத்தையும் சாந்தமாகச் செய்து ஸௌம்யப்படுத்தினார் கள். மத்யார்ஜுன க்ஷேத்ர தரிசனம் செய்து அத்வைத தத் வம் புரியாமல் ஜனங்கள் சிரமப்படும் பொழுது ஆசார்யாள் மத்யார்ஜுன க்ஷேத்திரத்தில் ஈச்வரனைப் பிரார்த்திக்க, மஹாலிங்க மூர்த்தி நேரில் தோன்றி அத்வைதமே ஸத்யம் என மும்முறை சொன்னார். அதன் பிறகு ஆசார்யாள் தென்னாட்டில் பரம கௌரவமடைந்தார்கள். பிறகு சிதம் பரத்தில் ஸ்படிகலிங்கமான சந்த்ரமௌளீச்வர மோக்ஷ லிங்கத்தை ஸ்தாபித்தார்கள். ஆங்காங்கு எதிர்ப்பட்ட மதவாதிகளைக் கண்டித்த ஆசார்யாளின் பெருமை என்னை போன்ற மந்தமதிகளால் சொல்லத்தக்கதன்று; வித்யா ரண்யஸ்வாமிகள் :

बुद्धो युद्ध समुद्यतः किलपुनः स्थित्वाक्षजद्विद्दतः
कोणेद्राक्कणभुग्व्यलीयत तमस्तोमावृतोगौतमः ।
भग्नोसौकपिलः पलायतपातञ्जलश्चाञ्जलिं
चक्रुस्तस्ययतीभितुश्चतुरता केनोपमोभेतमा ।।

"புத்தர், தார்க்கிகன், கௌதமர். கபிலர், பதஞ்சலி முதலிய எல்லா மதஸ்தர்களும் ஆசார்யாளின் எதிரில் நிற்க முடியாமல் மறைந்தார்கள்" என்று ஆசார்யாள் கண்டித்த மதங்களையும் அவாளுடைய பெருமையையும் விளக்குகிறார்கள்.

## 16. காஞ்சீபுரம் காமகோடி பீடஸ்தாபனம்:

உலகத்திற்கு மத்ய ஸ்தானமாயும். மோக்ஷபுரிகளில் ஒன்று எனப் பிரசித்திப்பெற்றதாயும். முப்பத்து முக் கோடி தேவதைகளால் ஸேவிக்கப்பட்டதாயும் தொண்டை மண்டலம் காஞ்சிமண்டலம் சான்றோர்கள் நிறைந்தது எனக் கொண்டாடப்படுவதாயும், 3 தினங்கள் தான் ஓரிடத்தில் வஸிக்கலாமென நிபந்தனையுள்ள ஸன்யாஸிகள் கூட நிபந்தனை இல்லாமல் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் வஸிக்கலாமென சாஸ்த்ரம் கூறுவதாயும், கிழக்கே மஹாபலிபுரம், தெற்கே திருபுலிவனம், மேற்கே விரிஞ்சிபுரம், வடக்கே நாராயணவனம் இவைகளை எல்லையாயும் கொண்ட காஞ்சி மண்டலத்திற்கு தலைநகராய் விளங்குவது காஞ்சிபுரம் என்னும் நகரம். இதில் ஏகாம்பரநாதர் என்னும் பெயருடன் பரமேச்வரன் மாமரத்தடியில் தோன்றியனுக்ரஹம் செய்ததும், ஹஸ்திகிரிநாதன் என்னும் வரதராஜப்பெருமாள் மலையில் கோயில் கொண்டதும், ஸர்வமங்களையான காமாக்ஷி அம்பிகையை பிரதானமாகவும் கொண்டுள்ளது. இந்த அம்பிகை பிலாகாசரூபிணி

யாயும், ஸர்வ ஜகத்துக்கும் அனுக்ரஹம் செய்யும் ஸௌந்தர்யமூர்த்தியாகவும் விளங்குகிருள். இப்படி உலகிலேயே உயர்ந்த காஞ்சீக்ஷேத்ரத்தை ஆசார்யாள் அடைந்தார்கள்.

1. ''காவிரி யாற்றிடையார் திருவானைக்
காவின் புடடைபுக்குத்
தேவியை யேத்துபு முன்னமையூர்
பலதீயுந்தகை தேர்ந்து
நீவிட யானை முகத்தனையம்
பிகை நேரிற்ருபித்தே
காவி மதுர்ப்பணை மேயவளம்பொலி
காஞ்சிப்பதி சேர்ந்தார்''

2. '' திருவருண்மிக்க வேகாம்பர நாதரை
தெரிசித் தருச்சித்துப்
பொருவில் காமாட்சிதன் சன்னிதி
மேவுபுபோற்றிக் கனிவோடுந்
தருமமெய்க் காமகோடி யந்திரத்தினைத்
தாபித்தன் மேய
சருவதே வாலய சீரணைத்
தகவாற் றினராகி.

3. '' கோலமிகப் பொலியம்பிகை கோயில்
கொள்குகையுட் புகுந்தங்கட்
டாலமதித்திடு கோவிந்த பாதருந்
தமிழ்மாமுனி வோனுஞ்
சாலவுரைத் துள வித்தைகள்
யாவையுந்தா முன்னுபுசித்தி
மேலமைவுற்றருள் யோகத்திறற்கொடுமீளிர்
வேங்கடம் புக்கார்.''

இந்த மூன்று பாசுரங்களும் பக்த மான்மியம் என்னும் புத்தகத்தில் உள்ளது. இந்த பாசுரங்கள் ஆசார்யாள் ஜம்புகேச்வரத்தில் தாடங்க பிரதிஷ்டை பண்ணியதையும், காஞ்சீபுரம் வந்து ஏகாம்பர நாதரை தரிசனம் செய்து, காமாக்ஷி ஆலயத்தில் அம்பாள் தரிசனம் காமகோடியந்திர ஸ்தாபனமும் செய்து, ஸர்வதேவாலய ஜீர்ணோத்தாரணமும் செய்து காமாக்ஷி ஆலயத்தின் கீழுள்ள குகையில் வெகுகாலம் வஸித்து, ஸகல வித்தைகளையும் ஸித்திபெற்றதாயும் கூறுகிறது. ஸ்ரீ ஆசார்யாள் காஞ்சிக்ஷேத்திரத்தை யடைந்து அம்பாள் உக்ர கலையை அடக்கி, காமகோடிபீடம் என்னும் ஸ்ரீசக்ரத்தை ஸ்தாபித்துதான் வாஸம் செய்வதற்கு மோக்ஷபுரியான காஞ்சீக்ஷேத்ரமே தக்க இடமென நிச்சயித்து அங்கு மடத்தை ஏற்படுத்தி கைலாசத்திலிருந்து கொண்டு வந்த ஸ்படிக லிங்க சந்த்ர மௌளீச்வர பூஜையும் ஸ்ரீ சக்ரமேரு பூஜையும் நடத்திக்கொண்டு அத்வைதாத்ம ஸாக்ஷாத்காரத்துடன் விளங்கி வந்தார்கள்.

## 17. பரகாய பிரவேசம் :

ஸ்ரீ ஆசார்யாள் காஞ்சி காமாக்ஷி ஸன்னதியில் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்ய எத்தனிக்கையில் ஸரஸ்வதி தான் கேட்ட காம சாஸ்த்ர ஸந்தேஹங்களுக்குப் பதில் சொல்லிய பிறகே ஸர்வக்ஞனுவாய் என்று சொன்னுள். ஆசார்யாள் பிரம்மசர்யத்திலிருந்தே ஸன்யாஸம் பெற்றவர்கள் ஆனபடியால் அதையறிந்தே பதில் சொல்ல நினைத்து, தன் சரீரத்தை ஜாக்ரதையாய் காப்பாற்றும்படி சிஷ்யர்களுக்கு ஆக்ஞாபித்து விட்டு, அந்த ஸமயம் மத்ய தேசத்தில் அரசனுயிருந்து மரித்துப்போன அமருகன் என்னும் ராஜாவின் சரீரத்தில் பிரவேசித்து ராஜசரீரத்துடன் ராஜ்ய பரிபாலனமும் அந்தபுர ஸ்த்ரீ ஜன ஸமாகமும் அடைந்து, இதுவரையில் ஒருவராலும் செய்ய முடியாத

அளவில் ஸகலகாரியங்களையும் செய்து வந்தார்கள். அந்த ராஜாவின் மஹிஷிகள் இவருடைய புத்தி விசேஷத்தையும், ராஜ்யம் அடைந்திருக்கும் மேன்மையையும் கண்டு இவர் அரசனல்ல, யாரோ யோகி, இவரை இந்த ராஜ சரீரத்திலேயே நிறுத்திவிட வேண்டுமென்று தீர்மானித்தவர்களாய் மந்திரிகளைக் கூப்பிட்டு உயிரற்ற சரீரம் எங்கிருந்தாலும் தஹனம் செய்து விடுங்கள் என்று ஆக்ஞாபித்தார்கள். ராஜஸேவகர்கள் அப்படியே செய்துகொண்டு வந்து ஒரு மலைக்குகையில் சிஷ்யர்களால் ரக்ஷிக்கப்பட்டு வரும் ஆசார்ய சரீரத்தை பலாத்காரமாய் தஹனம் செய்து விட்டார்கள், ஆசார்ய சிஷ்யர்கள் உடனே அரண்மனை ஸமீபம் வந்து 'தத்வமஸீ' என்னும் வாக்யங்களைச் சொல்லி ஆசார்யாளுக்கு ஞாபகப்படுத்தினார்கள். உடனே ஆசார்யாள் ராஜ சரீரத்தை விட்டுக் கிளம்பி, கொஞ்சம் வெந்து போயிருந்த தன் சரீரத்தில் பிரவேசித்து லக்ஷ்மீ நரசிம்மனை ஸ்தோத்ரம் செய்தார்கள்.

**"श्रीमत्पयोनिधि निकेतन चक्रपाणे**
**भोगीन्द्रभोगमणिरंजित पुण्यमूर्ते ।**
**योगीशशाश्वत शरण्य भवाब्धिपोत**
**लक्ष्मीनृसिम्ह ममदेहि करावलम्बम् "**

"பாற்கடலில் வஸிப்பவனே! சக்ராயுதத்தைத் தரித்தவனே! உயர்ந்த நாக ரத்னத்தால் பிரகாசிக்கிற புண்ய மூர்த்தியே! யோகீஸ்வரர்களுக்கு சாச்வத சரண்யனே! ஸம்ஸாரக் கடலுக்கு ஓடமானவனே! ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹா! எனக்குக் கைகொடுப்பாயாக" என்று அநேகம் சுலோகங்களோடு கூடிய "லக்ஷ்மீந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம்" செய்தார்கள். நரசிம்மன் பிரத்யக்ஷமாகி நல்ல சரீரத்தைக் கொடுத்து அனுக்ரஹம் செய்தார்.

## 18. ஸர்வக்ஞ பீடாரோஹணம் :

ஆசார்யாள் காஞ்சீ க்ஷேத்ரம் அடைந்து, ஸரஸ்வதி கேட்ட காம சாஸ்திர ஸந்தேஹங்களுக்கு பதில் சொன்னார்கள். மேலும், தாம்ப்ரபர்ணீ தீரத்திலிருந்து வந்தவர்களையும் வாதத்தில் ஜயித்து ஒருவரும் நிகரில்லாத ஸர்வக்ஞராய் ஸ்ரீசங்கர பகவத் பாதாசார்யாள் தேவர்கள் புஷ்ப வர்ஷம் வர்ஷிக்க, வாத்யங்கள் முழங்க, காஞ்சி காமாக்ஷி ஸன்னிதியில் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்தார்கள். ஆசார்யாள் காஞ்சியில் காமகோடி பீடாதிபதிகளாக இருந்து ஆங்காங்கு ஸ்தாபித்த மடங்கள் முதலியவைகளை தகுந்த சிஷ்யர்களைக்கொண்டு பரிபாலிக்கச் செய்து. சந்த்ர மௌளீச்வர யோக லிங்கத்தை ஆராதித்து பரமானந்த அத்வைத ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை யனுபவித்து, பிறகு அவதார பிரயோஜனம் முடிந்து விட்டபடியால் தனக்கு அடுத்த சிஷ்யரும் வார்த்திகம் நைஷ்காம்ய ஸித்தி முதலிய கிரந்தங்களைச் செய்தவருமான ஸ்ரீஸுரேச்வராசார்யாளை காமகோடிபீடாதிபதியாகவும் சந்த்ரமௌளீச்வர பூஜையும் ஸ்ரீ சக்ரமேரு பூஜையும் நடத்தி லோக க்ஷேமார்த்தம். அத்வைத க்ஞான வித்யையை சிஷ்யர்களுக்கு உபதேசித்துக் கொண்டு இந்த்ர ஸரஸ்வதீ என்னும் பட்டத்துடன் இருக்கும்படியும் ஆஞ்ஞாபித்து. காஞ்சீ க்ஷேத்ரத்தில் யோக பலத்தால் ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்மத்தில் லயிக்கச் செய்து, ஸூக்ஷ்மத்தையும் காரணத்தில் லயிக்கச் செய்து அதையும் விட்டு சின்மயமாக ஸர்வ வ்யாபியாக இன்றும் விளங்கி வருகிறார்கள்.

சுபம் !

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய குரு பரம்பரை.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ | சங்கர பகவத்பாதாள் | |
| 2 | ,, | ஸுரேச்வராசார்யாள் | |
| 3 | ,, | ஸர்வக்ஞேந்த்ர | ஸரஸ்வதி |
| 4 | ,, | ஸத்யபோதேந்த்ர | ,, |
| 5 | ,, | க்ஞானனந்தேந்த்ர | ,, |
| 6 | ,, | சுத்தானந்தேந்த்ர | ,, |
| 7 | ,, | அனந்தானந்தேந்த்ர | ,, |
| 8 | ,, | கைவல்யானந்தேந்த்ர | ,, |
| 9 | ,, | கிருபாசங்கரேந்த்ர | ,, |
| 10 | ,, | மஹேச்வரசுரேச்வரேந்த்ர | ,, |
| 11 | ,, | சித்கனேந்த்ர | ,, |
| 12 | ,, | சந்த்ரசூடேந்த்ர | ,, |
| 13 | ,, | ஸச்சித்கனேந்த்ர | ,, |
| 14 | ,, | வித்யாகனேந்த்ர | ,, |
| 15 | ,, | கங்காதரேந்த்ர | ,, |
| 16 | ,, | ஸதாசிவேந்த்ர | ,, |
| 17 | ,, | ஸுரேந்த்ர | ,, |
| 18 | ,, | வித்யாகனேந்த்ர | ,, |
| 19 | ,, | சங்கரேந்த்ர | ,, |
| 20 | ,, | சந்த்ரசூடேந்த்ர | ,, |
| 21 | ,, | பரிபூர்ணபோதேந்த்ர | ,, |
| 22 | ,, | ஸச்சித்சுகேந்த்ர | ,, |
| 23 | ,, | சித்ஸுகேந்த்ர | ,, |
| 24 | ,, | ஸச்சிதானந்தகனேந்த்ர | ,, |

| | | | |
|---|---|---|---|
| 25 | ஸ்ரீ | பிரக்ஞாகனேந்த்ர | ஸரஸ்வதி |
| 26 | ,, | சித்விலாஸேந்த்ர | ,, |
| 27 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 28 | ,, | பூர்ணபோதேந்த்ர | ,, |
| 29 | ,, | போதேந்த்ர | ,, |
| 30 | ,, | பிரம்மானந்தகனேந்த்ர | ,, |
| 31 | ,, | சிதானந்தகனேந்த்ர | ,, |
| 32 | ,, | ஸச்சிதானந்தேந்த்ர | ,, |
| 33 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 34 | ,, | சித்ஸுகேந்த்ர | ,, |
| 35 | ,, | சித்ஸுகானந்தேந்த்ர | ,, |
| 36 | ,, | வித்யாகனேந்த்ர | ,, |
| 37 | ,, | சங்கரேந்த்ர | ,, |
| 38 | ,, | ஸச்சித்விலாஸேந்த்ர | ,, |
| 39 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 40 | ,, | கங்காதரேந்த்ர | ,, |
| 41 | ,, | பிரம்மானந்தகனேந்த்ர | ,, |
| 42 | ,, | ஆனந்தகனேந்த்ர | ,, |
| 43 | ,, | பூர்ணபோதேந்த்ர | ,, |
| 44 | ,, | பரமசிவேந்த்ர | ,, |
| 45 | ,, | போதேந்த்ர | ,, |
| 46 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 47 | ,, | அத்வைதானந்தபோதேந்த்ர | ,, |
| 48 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 49 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 50 | ,, | வித்யாநாதேந்த்ர | ,, |
| 51 | ,, | ஸச்சித்கனேந்த்ர | ,, |
| 52 | ,, | பராத்வைதப்ரம்மானந்தேந்த்ர | ,, |
| 53 | ,, | ஸாந்த்ரானந்தேந்த்ர | ,, |
| 54 | ,, | மஹாதேவசிவேந்த்ர | ,, |
| 55 | ,, | அத்வைதசுகானந்தேந்த்ர | ,, |
| 56 | ,, | சங்கரானந்தேந்த்ர | ,, |

| | | | |
|---|---|---|---|
| 57 | ஸ்ரீ | பூர்ணாநந்தேந்த்ர | ஸரஸ்வதி |
| 58 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 59 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 60 | ,, | போதேந்த்ர | ,, |
| 61 | ,, | பரமசிவேந்த்ர | ,, |
| 62 | ,, | ஆத்மபோதேந்த்ர | ,, |
| 63 | ,, | மஹாதேவந்த்ர | ,, |
| 64 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 65 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 66 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |
| 67 | ,, | மஹாதேவேந்த்ர | ,, |
| 68 | ,, | சந்த்ரசேகரேந்த்ர | ,, |

தற்காலம் பீடாதிபதிகள்.

---

# காமகோடி பீடம்

## ஒரு அனுபந்தம்.

**காஞ்சி** க்ஷேத்ரத்தில் ஸ்ரீ பகவத் பாதாசார்யாள் காமகோடி பீடத்தை பிரதிஷ்டைபண்ணி மடஸ்தாபனம் செய்த விஷயங்கள் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. "ஆனந்தகிரீய சங்கர திக்விஜயத்தில்" காஞ்சியில் ஆசார்யாள் காமகோடி பீடத்தை ஸ்தாபித்து, தான் கொஞ்ச நாள் இருந்து, பிறகு ஸுரேச்வரரைக் கூப்பிட்டு பீடாதிபதியாக இருந்து, யோகலிங்க சந்த்ரமௌளீச்வர பூஜையையும் நடத்திவா என்று ஆஞ்ஞாபித்ததாகச்சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் நைஷதகாவ்யத்தில் ஸ்ரீ ஹர்ஷன் "ஸ்படிகபூர்ஜாகர்தியோகேஸ்வர." என்று சொல்லியிருப்பது ஆசார்யாள் பூஜித்த யோகலிங்க சந்த்ரமௌளியைக் குறிக்கிறது. மேலும் ஸ்ரீ ஹர்ஷன் "அத்வலதத்வ இவஸத்யதரேபிலோக:." என்று அத்வைத வித்யையைப் புகழ்கிறார். மேலும் இந்த மடத்தைப்பற்றிய சிலசாஸனங்கள் உள்ளதாய் தெரிகிறது. 13-ஆம் நூற்றாண்டில் காஞ்சியில் ஆண்டுவந்த சோழ மன்னன் ஒரு கிராமத்தை காமகோடி பீட மடத்திற்குக் கொடுத்ததாயும், இந்த மடம் ஹஸ்திகிரிநாதர் கோவிலுக்கு மேற்கில் இருப்பதாயும் ஒரு சாஸனம் சொல்லுகிறது. விஜயநகர சாம்ராஜ்யம் இருந்த காலத்தில் கிருஷ்ணதேவராயரும், அவர் பிதா நரஸிம்ம தேவராயரும் செங்கல்பட்டு ஜில்லாவிலும் 6-முழுக் கிராமங்களை காஞ்சி ஸ்ரீ மஹாதேவ ஸரஸ்வதி. ஸ்ரீ சந்த்ரசூட ஸரஸ்வதி, ஸ்ரீ ஸதாசிவ ஸரஸ்வதி ஆசார்யார்கள் காலத்தில் கொடுத்திருக்கிறார்கள். 17-ஆம் நூற்றாண்டில் கோல்கொண்டா ராஜ்ய மந்திரிகளான அக்கன்னா மாதன்னா என்பவர்கள் காஞ்சி சாரதா மடத்திற்கு ஒரு கிராமம் கொடுத்து இருப்பதாகத் தெரிகிறது. மதுரை ராணி மங்கம்மாளின் புத்திரர் விஜயசொக்க நாய்க்கர் திருச்சி

ஜில்லாவில் 6-கிராமங்களில் சில நிலங்களை லோககுரு சங்க ராசார்ய ஸ்வாமிகளுக்குக் கொடுத்திருக்கிறார். 1710ஸ முகம்மதியராஜ்யத்தல் ஆலங்கீர் என்பவரின் உத்திரவின் பேரில் செங்கற்பட்டு ஜில்லாவில் ஒரு கிராமத்திலிருந்து 1'5-வராகன் வருஷ வர்த்தனையாகக் கொடுக்கும்படி ஒரு சாஸனம் ஏற்பட்டது. இம்மாதிரி பல சாஸனங்களி லிருந்து 1710ஸ வரை காஞ்சீபுரத்தில் இந்த மடம் இருந்த தாயும், பிறகு கர்நாடக யுத்தகாலத்தில் காஞ்சியைவிட்டு தெற்கே பாளையக்காரர்கள் ஆதரவில் இருந்து, கடைசியாக 1730ஸ வாக்கில் தஞ்சாவூர் அரசரின் ஆதரவில் கும்ப கோணம் போய்ச் சேர்ந்ததாகத் தெரிகிறது. ஸ்ரீ சங்கரர் காஞ்சியை அடைந்தது. காமாக்ஷியை பிரதிஷ்டை செய் தது, அங்கேயே ஸித்தியடைந்தது இவை பற்றி "ஹால்ஷ" என்பவர் தன் ரிபோர்ட்டில் சொல்லியிருக்கிறார். 1946-ம்ஸ கூடலி சிருங்கேரி மடத்தார் வெளியிட்டுள்ள "குருபரம் பரா ஸ்தோத்திர மாலையில்" உள்ளதும் இதை ஊர்ஜிதப் படுத்துகிறது. காஞ்சி காமாக்ஷி கோயிலில் இருக்கும் ஆசார்யமூர்த்தியைத் தவிர, செங்கற்பட்டு ஜில்லாவில் திருவொற்றியூர். மாங்காடு. பூந்தமல்லி, பாப்பான்சத்ரம், கடம்பர் கோவில், முதலிய இடங்களில் உள்ள கோவில் களில் ஆசார்யாளின் மூர்த்திகள் இருக்கின்றன. இம் மாதிரி பல தகவல்கள் காஞ்சியில் காமகோடி பீட மடத்தை நன்கு ஊர்ஜிதம் செய்கிறது.

இந்த பீடத்தில் இப்பொழுது பீடாதிபதியாக ஆசார்ய ஸ்தானத்தை வஹிக்கும் ஜகத்குரு சங்கராசார்ய ஸ்ரீ சந்திர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீ பகவக் பாதாளின் அவதார பூதர்கள் என்று சொல்லக்கூடிய ஹேதுக்களிருக்கின்றன. பகவத்பாதாள் நடத்திய திருவா னைக்காவல் அகிலாண்டேச்வரீ தாடங்க பிரதிஷ்டையை இவர்கள் செய்தது ஓர் உதாஹரணம், மேலும், தஞ்சா வூர் பங்காரு காமாக்ஷி கும்பாபிஷேகம். காஞ்சி காமாக்ஷி

யின் மஹா கும்பாபிஷேகம். ஸ்ரீ சக்ரரூபமான வெள்ளிரத நிர்மாணம் இவைகள் குறிப்பிடத்தக்க தெய்வீகச் செயல் கள். இவர்களை ஒரு முறை தரிசனம் செய்தவர்கள் ''ஆசார்யாள் என்னிடத்தில்தான் அதிக பிரியமுள்ளவர் கள்', என்று சொல்லத் தவறுவது இல்லை. இவர்கள் பெரிய சாஸ்த்ரங்களையும் ஸுலபமான முறையில் உபதேசிப் பார்கள். இவர்கள் உபதேசத்தின் ஒரு பகுதி ''நாம் அத் வைதத்தை நம்பிக்கொண்டு துவைதத்தை அனுபவிக் கிறோம். துவைதம் இந்த்ரியங்களால் தெரிவிக்கப்படு கிறது. அத்வைதம் வேதாந்தங்களால் தெரிவிக்கப்படு கிறது. ஸூரியன் 1000-கோடி மைல் விஸ்தீரணமுள்ளது என்று சாஸ்திரம் சொல்லுகிறது, ஒரு சாண் விஸ்தீரண முள்ளதென்று கண் சொல்லுகிறது. கண்ணால் தெரிவிக் கப்படுவது துவைதம், வேதாந்தத்தால் தெரிவிக்கப்படுவது அத்வைதம்'' ''இன்னொரு உபதேசம் ''இந்த விழிப்பிற்கும் ஞானத்தால் ஒரு விழிப்பு ஏற்பட்டால் அப்பொழுது இந்த விழிப்பில் காணப்படும் 1000-கணக்கான பொருள்களும் மறைந்து இப்பொழுது நானென்று சொல்லும் ஆத்மப் பொருளே பாக்கி நிற்கும். இந்த திருஷ்டாந்தத்தை அறிவு படுத்தவே ஈச்வரன் ஸ்வப்னத்தை ஸ்ருஷ்டி செய்திருக் கிறார்.'' இம்மாதிரி அநேகம் உபதேச ரத்னங்கள் உண்டு. இந்த உபதேச அம்ருதத்தைப் பானம் பண்ணியவர்கள் மிகுந்த புண்ணியவான்கள் என்பதிலும், இந்த மஹாபுரு ஷாள் பகவத்பாதாளின் அவதாரம் என்பதிலும் ஸந்தே ஹம் இருக்க முடியாது. அப்படிப்பட்ட இந்த ஆசார்யாள் பகவத் பாதாளின் 32-வயது போன்ற அநேகம் 32 கொண்ட வர்களாக இருந்து, இந்த பீடத்தை அலங்கரித்து சிஷ்ய ஜனங்களுக்கு உபதேசம் செய்து நல்வழிப்படுத்த இவர்கள் நமக்கு அருளவேணுமாய் ஸ்ரீ காமாக்ஷியான மஹா திரிபுர ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்த்ர மௌளீச்வரரை மனமுருகப் பிரார்த்திப்போமாக.

உ

# ஸ்தோத்ர கமலாகரம்

(முதல் பாகம்)

ஸ்ரீ கணேச புஜங்கம், ஸ்ரீ கணேச கவசம்,
ஸ்ரீ விச்வநாதாஷ்டகம், ஸ்ரீ ஹாலாஸ்யேசாஷ்டகம்,
கௌரீ தசகம், தசச்லோகீஸ்துதி,
சிவநாமாவல்யஷ்டகம், தாரித்ர்ய
தஹந சிவஸ்தோத்ரம்,
ஸ்ரீ சுப்ரஹ்மண்ய
புஜங்க ப்ரயாத
ஸ்தோத்ரம்

ஆகிய ஸ்தோத்ரங்கள் நாகரம், தமிழ் லிபிகளிலும் தமிழ் உரையுடனும் கொடுக்கப்பட்டுள்ளன.

***

ஒவ்வொரு ஆஸ்திகர் இல்லத்திலும்
இருக்கவேண்டிய அரிய பொக்கிஷம்

104 பக்கங்கள்] [விலை ரூ 1—50

கிடைக்குமிடம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
சிவபுராண ஞான பூஜகர்
மேலமாம்பலம், சென்னை-33

# நமது அரிய பிரசுரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் | —1968 | ரூ 1-00 |
| 2. | ,, | —1969 | ரூ 1-00 |
| 3. | ,, | —1970 | ரூ 2-50 |
| 4. | ,, | —1971 | ரூ 2-50 |
| 5. | ,, | —1972 | ரூ 2-50 |
| 6. | ,, | —1973 | ரூ 2-50 |
| 7. | ,, | —1974 | ரூ 2-50 |

சலுகை விலை: ரூபாய் 11/- நன்கொடையாக அனுப்பும் நேயர்களுக்கு மேற்கண்ட 7 மலர்களும் இரண்டொரு இலவச வெளியீடுகளும் சேர்த்து அனுப்பி வைக்கப்படும்.

8. ஸகல காரிய ஸித்தியும் சைவத்திருமுறைகளும் (லிப்கோ பிரசுரம்) — ரூ 4-00
9. விபூதியும் ருத்ராக்ஷமும் — ரூ 0-40
10. ஞான யோகம் — ரூ 0-50
11. ஸ்தோத்ர கமலாகரம் (முதல் பாகம்) — ரூ 1-50

விசேஷ சலுகை, (1) ரூபாய் 5 மட்டும் அனுப்புபவர்களுக்கு வேறு எந்த செலவுமின்றி மேற்கண்ட நான்கு புத்தகங்களும் அனுப்பி வைக்கப்படும். (2) ரூபாய் 15/- நன்கொடை அனுப்புபவர்களுக்கு மேற்கண்ட 11 புத்தகங்களும் அனுப்பிவைக்கப்படும்.

**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**

மேலமாம்பலம், சென்னை-33.

*Printed at Ramayana Printing Works, Madras-4.*